உ

குருவே துணை

# விநாயகர் அரிகரபுத்திரர் இரேணுகாம்பாள் தோத்திரப்பதிகங்கள்

இவை
மஹான் வண்ணச்சரபம்
திருப்புகழ்ச்சுவாமிகள் முருகதாசசுவாமிகள்
எனவழங்கும்
ஸ்ரீலஸ்ரீ தண்டபாணிசுவாமிகளாலும்
ஷை சுவாமிகள் குமாரர்
தி. மு. செந்திநாயகம்பிள்ளையாலும்
யெற்றப்பெற்று



சென்னை 'கேசரி' அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பெற்றது.

1929

சுக்கிலஞு சிம்மரவி.




உ

குருவே துணை

விழுப்புரந்தாலுகா விக்கிரவாண்டிக்கடுத்த

இராதாபுரத்தில் விளங்கும்

விநாயகர் அரிகரபுத்திரர்

இரேணுகாம்பாள்

# தோத்திரப்பதிகங்கள்

இவை

மஹான் வண்ணச்சரபம்

திருப்புகழ்ச்சுவாமிகள் முருகதாசசுவாமிகள்

எனவழங்கும்

ஸ்ரீலஸ்ரீ தண்டபாணிசுவாமிகளாலும்

ஷை சுவாமிகள் குமாரர்

தி. மு. செந்திநாயகப்பிள்ளையாலும்

இயற்றப்பெற்று

இராதாபுரம் நடுக்கம்பத்தம்

இலக்ஷ்மீ நாராயண ரெட்டியாரவர்களால்

சென்னை, 'கேசரி' அச்சுக்கூடத்திற் பதித்து

ஷை ஆலய கும்பாபிஷேக காலத்தில்

வெளியிடப்பட்டன

சுக்கிலஹூ சிம்மரவி.

3/2

# முகவுரை

இப்புத்தகத்தி லமைந்துள்ள மூன்று பதிகங்களில், முன்னையதாகிய விநாயகர்பதிகமும், பின்னையதாகிய, ரேணுகாம்பாள் பதிகமும், ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் குமாரர் ஸ்ரீமான், தி. மு. செந்திநயகம்பிள்ளை யவர்களால் இக்காலத்திலும், இடையிலுள்ள அரிகரபுத்திரர் பதிகமொன்றும் அகவலும் மஹான் வண்ணச்சரபம் ஸ்ரீலஸ்ரீ திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என்கிற தண்டபாணி சுவாமிகளால் முற்காலத்திலு மியற்றப்பெற்றனவாம். இரண்டாவதான பதிகம் ஊர்ப் பெயரின்றி ஸ்ரீ அரிகரபுத்திரர்மீது பாடப்பெற்றிருந்தது. இக்காலத்தில் இராதாபுரநகரில், சிறந்து விளங்கும் வேமன குலத்தினரி லொருவரும், ஷை சுவாமிகளது அன்பின் மிக்கவரும் ஷை சுவாமிகளது ஆலய தருமாபிவிர்த்திப் பிரசாரகருமாகிய நடுக்கம்பத்தம் இலக்ஷுமீநாராயண ரெட்டியாரவர்களது விருப்பத்துக் குதவவென்றே சுவாமிக ளெழுதிவைத் திப்போதுதவச் செய்ததென்று அப்பதிகத்தீற்றிலுள்ள பாயிரக்கவி விளக்குவதன்றியும், மூன்றுவதான பதிகத்தில் அய்யனர் சந்நிதி முதலிய இடங்களில், உயிர்க்கொலை நடவாவண்ணம், இந்த லக்ஷுமிநாராயண ரெட்டியாரவர்கள் தமது ஆசாரிய அநுக்கிரகமாகிய சிவகருணையாலும், சொல்வன்மையாலும் நிறுத்திச் சுத்தபூசை நடத்த நியமித்து நிகழ்ந்துவருவதாயும் ஆருவது செய்யுளால் விளங்குகின்றது; இது எல்லாவற்றிலுஞ் சிறந்த அறம் என்னலாம்.

"சுத்தபூசை தோய் தருமாகிற்
பேயுந் தெய்வமாம் பிணப்பலி யேற்கிற்
றெய்வமும் பேயாமெனு மிதுதிறமே".

என்ற சத்தியசூத்திரப்படி தமது நகரிலுள்ள அரிகரபுத்திரர், ரேணுகை, முதலியவர்களின் ஆலயத்திலிருந்த பேய்த்தன்மையை நீக்கித் தெய்வத்தன்மை விளங்கச் செய்யுந் தருமமுயற்சியில் முரண்படாமல் ஒத்திருந்து அனைவரும் முயலும்படிசெய்த திருவருளுக்கு நாம் செய்யும் கைமாறு யாதுளது?

இதுபோன்று இவ்விசேடச் செய்கையை இப்புத்தக மூலமாகத் தெரிந்துகொள்ளும் ஒவ்வொரு நகரவாசிகளான, பிரபலசற்சனர்களும் தங்களூர்களிலுள்ள, ஐயனார், பிடாரி, காளி, மாரி, திரௌபதி முதலியவர்களின் ஆலயங்களிலுள்ள கொலைப்பூசையை யொழித்து சுத்தபூசையாக நடத்திப் பயன்பெறவேண்டுமென்று யான் மனமொழி மெய்களால் வணங்கிப் பிரார்த்திக்கின்றேன்.

இந்தப் பதிகங்களைத் திருவாமாத்தூர், கௌமாரமடாலயத்திலிருந்து வேண்டிப் பெற்று அச்சிட்டு ௸ ஆலய சிரேணோத்தாரண கும்பாபிஷேககாலத்தில் வெளியிடுவித்த இலக்ஷ்மீநாராயண ரெட்டியாரவர்களுக்கும் அவரது சகோதரவர்க்கத்தினருக்கும் அதனி லிணங்கி நடக்கும் நகரவாசிகளுக்கும் இந்தத் தோத்திரங்களை அன்புடன் படிக்கும் உத்தமர்களுக்கும் எல்லா நன்மைகளு மினிது பெருகும்படி திருவருள் தயைபுரிவதாகுக. சுபம்.

சுக்கில௵ ஆவணி ௴

இங்ஙனம்:
தி. சே. முருகதாசபிள்ளை,
திருவாமாத்தூர் கௌமார மடாலயம்.

குருபாதமேகதி.

உ

குருவே துணை

தி. மு. செந்திநாயகப்பிள்ளையியற்றிய

# விநாயகர் பதிகம்

காப்பு

வெண்பா

காரார்பைஞ் சோலை கவினுமிரா தாபுரத்திற்
சீரார் கணேசர்துதி செப்புதற்குக்—கூரார்
மருப்பாற் கதையெழுது மாட்சியுறு மன்னர்
திருப்பாதங் காப்பாந் திறம்.

எண்சீர்விருத்தங்கள்

செந்தமிழா லுன்புகழே பாடிமிகத் துதித்துன்
திருவடியே கருதியுன்றன் திருக்கோயிற் பணிசெய்
தெந்தவிதப் பயனுமெளி தடைந்துமகி ழடியா
ரினத்திலடி யேனுமமைந் தின்புறச்செய் தருள்வாய்
குந்தவயிற் கரக்குமரன் றன்விருப்பின் வண்ணங்
குறிச்சியில்வா ரணப்படிவங் குலவவந்து திகழ்ந்து
கந்தமலர்க் குழற்குறமின் கலப்பமையப் புரிந்தாய்
கவின்கொளிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (க)

பொற்பனமொன் றன்பால்வைத் திருபுலவர் கடிது
புனல்படிந்து வருமுன்மறைத் தவரிலொரு புனிதன்
விற்பனத்தாற் புகல்கவிகொண் டிரண்டுபணங் கொடுத்த
மேன்மையுடைக் கடவுளென விழைந்தனவர் தடைந்தேன்
சிற்பர்செயு முருவமன்றிக் கோமயமா தியினுற்
சிந்தைவிருப் புடனுலகோர் செய்பவற்று மிருந்தாய்
கற்பனைதீர் மெஞ்ஞான விநோதவருண் மதங்கள்
காட்டிவிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (உ)

திரிபுரஞ்சுட் டிடப்பரமன் சென்றிடுநா ளுன்னைச்
சிந்தனைசெய் யாப்பிழைக்காத் தேரினச்சிற் றிடச்செய்
துரியவழி பாடுகொண்டின் னருள்புரியுன் பெருமை
யுணர்ந்துதுதித் திடும்வலிமை யுதவியெனைப் புரப்பாய்
பரிமிசைசென் றிடுசேரன் சுந்தரனுண் ணுனைப்
பரிவுடனௌ வையைக்கயிலைப் பருவதத்தி லமைத்தாய்
கரிவதனப் பரபாசாங் குசம்புனைகைப் பெரியாய்
கலியிலிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (ங)

மெய்கண்ட தேவனுக்கு வெண்ணெய்நல்லூ ரதனில்
விளங்குசிறு பருவத்தே வியன்குருவாத் தோன்றி
மைகண்ட மிடற்றிறைவ னுகமத்தின் பொருட்சீர்
வயங்கவுரைத் தருளியநின் மகிமைசொல வருள்வாய்
பைகண்ட வுடற்பணிபூண் டிடுமேகட்டுப் பவளப்
பருப்பதம்போ லாகுமிசைப் பவனிவரும் பெரியாய்
கைகண்ட பயனுதவுந் தெய்வமெனப் புனிதர்
கழறவிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (ச)

நம்பியாண் டான்புரியும் பூசையந்நாள் கொண்டு
நயந்தநிவே தனத்தையெல்லா நால்வாய்கொண் டருந்திச்
செம்பியன்றூழ்ந் திறைஞ்சிநலங் கொண்டுதிரு முறைகள்
திறந்தெடுக்குந் திறமுறவுந் திருவருள்பா லித்தாய்
தும்பிமுகக் கடவுளெந்தந் துணையெனப்போற் றிடுவார்
துயரனைத்தும் போக்கியருள் சுத்தமயப் பொருளே
கம்பிதமெய் தாமனத்துத் தொண்டர்பணிந் தேத்திக்
களிக்கவிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (ரு)

சனகனெனு மரசனந்நா ளளித்தவுண வனைத்துந்
தானயின்றும் பசிசிறிதுந் தணிந்திலது வருந்தி
மனவிருப்போ டன்பனளித் திடுமறுகா லுவகை
மருவுதிரு வுளமுடைய வரதனென்று சேர்ந்தேன்
சினமழுக்கா றகந்தைதுயில் காமமுதற் பகருந்
தீக்குணமுற் றொழித்தரிய தெள்ளுணர்வெற் கருள்வாய்
கனகமணிப் பூணணிமங் கையர்விளையாட் டோங்குங்
காவினிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (சா)

சித்தியுடன் புத்தியெனுந் தேவியர்க ளிருவர்
திகழுமருங் குடன்பவளச் சிந்துரமா முகமும்
பத்தியுளார் வினைமுழுதுந் தவிர்த்தருளும் பதமப்
பதமிரண்டுந் துலக்கியெலிப் பரிமிசைவந் தருள்வாய்
சித்திரமாச் சத்திசிவப் பிரவணங்க டம்மிற்
சேர்ந்தவிடத் தானைமுகச் சேயெனவந் துதித்தாய்
கைத்திறத்தாற் பொருதகனற் றகுவனையுண் டுவந்தாய்
கனங்கொளிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (எ)

சேலனைய விழியமுதே யனையமொழி கார்நேர்
செறிந்தகுழல் முருந்தனைய சிர்நகைகொள் மடவார்
நூலனைய விடைமலைநேர் முலைமுதலா முறுப்பை
நுவன்றுவருந் திடுமயலை யொழித்தடியார்
பாலனைய மனத்தினுக்காம் பணிபுரிந்து தவமே
பற்றிநிற்குந் திறமெனக்குப் பரிந்துதவற் கிசைவாய்
காலனையச் செகுத்தசிவன் காதலனென் றன்பர்
கருதவிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (அ)

தேகமே நானெனவு மைம்புலத்தின் வழியே
தேர்சுகமே முத்தியென்றுஞ் செப்புலகா யதன்றன்
பாகமே யுள்ளிசைந்து வெளியிலுன தடியே
பற்றுதொண்ட னெனவேடம் பகட்டுரைகொண் டுள்ளேன்
சோகமறுத் துன்மையரு பூதியமைந் துனது
துணையடியிற் புகவிடுவாய் துகளில்குறு முனிபாற்
காகமெனச் சென்றுகமண் டலங்கவிழ்த்தா றளித்தாய்
கயங்கொளிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (கூ)

சண்மதமுந் தழுவியப்பாற் றயங்குமதி தத்தைச்
சார்ந்துரிமைக் குருபரனைத் தனிப்பரமென் றோது
முண்மையருட் கவுமார சபையின்காரியங்க மகிமை
ளுயர்த்துமிலக் குமிநாரா யணன்முதலாந் தொண்டர்
வண்மையுறக் காத்தருளிப் புகழ்வளர்க்கு முன்சீர்
வழுத்துமவர்க் கெப்பயனும் வழங்கவெதிர் வருவாய்
கண்மயில்கள் சிறைவிரித்துக் களிநடனம் புரியக்
காணுமிரா தாபுரத்திற் கலந்தகணபதியே. (கo)

வேமனன்ற னருண்மரபி னுதித்துழவுத் தொழிலால்
விளங்குமற மாதியநாற் பயன்களுங்கொண் டுவந்தே
காமமுநிட் காமமுமுன் பின்முறையே யமைவார்
கணங்கொளிரா தாபுரத்திற் கலந்தகண பதியைச்
சேமமலி மாதைநகர்த் திருத்தண்ட பாணி
சேயனென வந்தசெந்தி னாயகன்சொல் பதிக
நேமமுடன் றுதிக்குமவ ரிகபரபோ கங்க
நிகழவறு பவித்தழியா நிசகதிசேர்வாரே. (கக)

முற்றிற்று.

---

உ

குருவே துணை

ஸ்ரீ தண்டபாணிசுவாமிகளியற்றிய

# அரிகர புத்திரர்பதிகம்

---

நேரிசைவெண்பா

ஓங்கார மூர்த்தி யுரையா லொருசிறிதுந்
தீங்காரா வேற்பெருமான் சிட்டினற்—காங்காரும்
வண்ணநெடு மேனி மகாசாத்தா வைத்துதிக்கு
மெண்ணமுற்றே னென்செயலின் றே.

எழுசீர்த்தாழிசைகள்

என்டருதேவர னேகரைநாடியி றைஞ்சினனியாரு மெனைக், கண்டருள்செய்தில ரும்மைநினைந்துக ரந்தொழு தேனருள்வீர், பண்டயிராணித வங்குலையாதுப ரிந்தருளும் புகழ்வேட், டண்டருமானிட ரும்பணியத்திக ழரிகரபுத்திரரே. (க)

போகாதிக்கமு ளாரையுமூனுகர் புல்லரெனக்கருதிச்
சாகாதிக்கிடர் செய்பவர்தம்மைவெல் சால்புதரத்துணிவீர்
மாகாளப்பெயர் வீரனனர்பலர் வந்தனைகொண்டுலவா
வாகாயத்தினி றங்கொடுநீடுறு மரிகரபுத்திரரே. (உ)

மானைநிகர்த்தக ணார்மயல்வாரியின் மாழ்கினுமாசறு செந், தேனைநகத்தகு பாடல்செய்வேன்மிசை சிறிதருள் புரியீரோ, மேனைமகட்புரை மோகினிதோளரன் வெஃகிய

நாளினுதித், தானையிடத்தில கெங்குமுலாவரு மரிகரபுத்திரரே. (ங)

நடலைமிகப்பெறு வார்குடைநீழலி னைவுறுநான்மகிழத், திடமுறுசித்தியொ ரெட்டுமளித்திரு சேவடியும்புனைவீர், கடல்பொருமேனியி லங்கிநிறங்கொள் கவின்சடையாதியதோய்ந், தடல்கெழுசெண்டுபி டித்தவுணர்ச்செறு மரிகரபுத்திரரே. (ச)

அங்கமரேசனி னைத்தலுமுன்னர விர்ந்தருள்செய்தலினென், செங்கவிவெளவிய தாலெனதின்னல்செ குக்கவிழைந்திரோ, பங்கமில்கோழிவ ரைந்தபதாகைப ரித்திருபன்னியர்கொண், டங்கணிலத்துறு மூர்முழுதாண்டருளரிகரபுத்திரரே. (ரு)

வாசவனுதியர் தந்துயர்தீர வரந்தருநீர்பசுமே
னேசமிகுந்தமி யேனையொர்சற்றுநி னைந்தருளிற்பழியோ
வீசன்முராரியெ னச்சதுமாமறை யேத்திருவர்க்குளவா
மாசறுவல்லப மத்தனையும்பெறு மரிகரபுத்திரரே. (சு)

பல்லவமிட்டவ ருக்கும்வரந்தரு பண்ணவனுல் வருநீ
ரல்லல்களைந்தரு ளாவிடினும்மைய ணிந்தவிதார்பகர்வார்
நல்லகுளங்கரை யாதியபல்வயி னணுகுபுனாங்கருளா
னல்லதுவேறிணை யின்றிவிளங்குறு மரிகரபுத்திரரே. (எ)

காழியிலோர்பன வச்சிசுவந்துக றுஞ்சமணர்ச்செறல்போன், றேழிசைமுத்தமி ழாலெணிலீனரை யான்வெனும்வாழ்வருள்வீர், பாழிலெதிர்த்திக லுஞ்சமயத்தினர் பற்பலரும்பழியா, தாழிவளைந்தபு வித்தலைகைதொழு மரிகரபுத்திரரே. (அ)

சூரனெனுந்தகு வன்பினுதித்தவ சோமுகியைத்துணிசெய
வீரனெனுதுகலிக்கொடுநோயையும் வெட்டவிடுத்தருள்வீர்
சீரளவின்றிய கோடியுளீர்தவ சிலர்தமக்கெளியீ
ராரணமாகம மியாவுமிகப்புக ழரிகரபுத்திரரே. (கூ)

திக்கலும்கண்பெறு பேய்களுநல்லன தின்னல்செயக் கருதோ, ருக்கமுமீளற்கருள் செய்யினுமக்குமொ ருதிய முண்டறிவீர், மோக்கமுடன்பல சித்திபுகம்பிய முத் தர்பெறத்தரலா, லாக்கல்புரத்தல ழித்தலுளார்மிக ரரிகர புத்திரரே. (கo)

வாசியொடானையி லூர்பவரும்மது மாட்டுளரேயவரு, டேசிலொருத்தனே யேனுமென்மெய்த்துணே யென்றுற வின்றருள்வீர், பூசியநீறுடை யிருயர்பூரணே புட்கலைதோள் புணர்வீ, ராசிரியயத்திர ளுடுறுசிர்பெறு மரிகரபுத்திரரே.

வாலியநீறுபு னேந்தபிரானும ருண்டுருகச்செயுநல்
வாலிகர்த்தசொன் மோகினிதங்கரு ளரிகரபுத்திரரைச்
சாலிநகர்த்தவ மேநிகருஞ்சிறு சங்கரனேதியபா
வேலியெனச்சுக மேபெருகத்தகு மிக்கபயன்றருமே. (கஉ)

முற்றிற்று.

---

பாயிரம்

இந்தப்பதிக நடுநாட்டி லிசைந்தவிராதா புரத்திடை வாழ், சொந்தக்குணமா ரிலக்குமிநா ரணப்பேர்த்தூயன் விரும்புவனென், றெந்தங்குருவாந் திருப்புகழோ னெழி லார்சாத்தன் றனக்குமுன்னுள், தந்தபெருமை யிந்நாளிற் சரதமாகத் தெரிந்தோமே.

தெய்வமேதுணே.

உ

குருவேதுணை

## ஸ்ரீ தண்டபாணிசுவாமிகளியற்றிய

# சாத்தனாரகவல்

---

கடல் வளைந்துடுத்த காசினித் தலைவா
முடல்கெழு தேவ ரனைவர் தாமுஞ்
சிவகலை வென்றித் திருமால் கலையென்
றவமில்சீர்ப் பெரியோ ரறியத் தோற்றலி
னவ்விரு கலையு மமையு மும்மா
லெவ்வித நலனு மெய்தத் தகுமென்
றுன்றநூல் பலவு மளவறப் புகன்று
மேன்றள வுரித்துற் றிறைஞ்சில னெனைநீர்
தாமே வலிதிற் றடுத்தடுத் தெனது
பாமேல் விழைவுறு பண்பு காட்டிப்
பணிகொளல் விண்ணூர்ப் பண்ணவர் தாமு
மணிதர வேண்டு மாதலி னெனது
பாக்கொடு நாளும் பழிச்சுநர் தமக்கும்
ொக்கொடு திருவும் வழங்கி யப்பா
றைமுகற் பகர்வ வாம்பய னான்குந்
திறமுறப் பயிற்றிச் செனிப்பறப் புரப்பீர்
பல்வகை நகரும் பருப்பதத் திரளுஞ்
செல்வழித் தொகையுந் திருக்குளங் கரையும்
வாரமிக் குள்ளார் மனந்தொறும் வைகிப்
பூரணை புட்கலை போக மாந்தி
யீடில்சீர்ப் புதல்வ ரிருவர்ப் பயந்து
கேடில்பல் கணமுங் கிளர்தரப் புரக்கு
மைய னாரே யரிகர புத்திரச்
செய்ய நாமந் திகழ்குரு மணியே.

முற்றிற்று.

உ

குருவே துணை

தி. மு. செந்திநாயகம்பிள்ளையியற்றிய

# ஸ்ரீ ரேணுகாம்பாள்பதிகம்

---

## காப்பு

### வேண்பா

இராதா புரம்வா ழிரேணுகையைப் பாவாற்
பராவுவதற் கானதுணை பாரி—லராவணைய
மாயையறுத் தின்பம் வழங்கிடும்வி நாயகன்றன்
றாயமலர்ப் பாதத் துணை.

### கலிவிருத்தங்கள்

உலகினுன்றனைப் பற்பலர்நகர்தொறு முறவைத்
தலகிலன்புடன் வணங்கிநற்பயன்பல வடைவார்
குலவுபல்லுயிர் கொன்றிடாத்திரமுறக் குயிற்று
யிலகுசீரிரா தாபுரத்தமரிரே ணுகையே. (க)

மந்திரத்தவ முனிவன்றன்கற்புறு மனையாய்
வந்திலங்கிமா தவத்தினற்றெய்வநல் வடிவுற்
றந்திவான்மதிச் சடிலன்போனுடுக்கைபாம் பணிந்தா
யெந்திரத்திரா தாபுரத்தமரிரே ணுகையே. (உ)

சிறுமகார்வருந் துறவைசூரியையுறச் செய்யுந்
தறுகண்மேவுவை யென்பர்சில்லோர்மனத் தயையான்
மறுகுநோயற வுடல்பலமுறச்செய்யு மாண்பே
யிறுதிநீரா தாபுரத்தமரிரே ணுகையே. (ங)

கார்த்தவீரிய னென்றகாந்தருவினைக் கையிற்
சேர்த்தவாளியி னுற்செகுத்திடும்வலி திகழ்ந்த
மூர்த்தமாகிய பரசுராமனைப்பெறு முதல்வீ
யேர்த்தரத்திரா தாபுரத்தமரிரே ணுகையே. (ச)

பேதந்தீரவுன் பதம்பணிபவர்க்கருட் பேறீறின்
போதந்தோய்தரப் புரிவதுன்கடனது புரிவாய்
வாதந்தீர்சம ரசவுணர்வாளர்கள் வசிப்பா
லேதந்தீரிரா தாபுரத்தமரிரே ணுகையே. (ரு)

உயிரிலக்குமி நாரணப்பெயரின னுரையாற்
றுயர்செயுங்கொலை யிலாநலம்வி ளங்கிடல்சுகமே
மயல்செய்மாயைநீர் மாரியென்றுரைத்தடி வணங்கு
மியல்புள்ளோரிரா தாபுரத்தமரிரே ணுகையே. (சா)

உன்னதாலயத் திருப்பணியன்பின னுஞற்றிப்
பொன்னதன்பய னடைந்தவுத்தமர்நலம் பொலிந்தே
நன்னர்வாழ்ந்திடத் தயைபுரிந்திடுகவிண் ணகர
மென்னநீடிரா தாபுரத்தமரிரே ணுகையே. (எ)

முழுவுடம்புட னுனையமைப்பார்சிலர் முறைமை
வழுவினின்முக மட்டும்வைப்பார்சிலர் மகிமே
லெழுவன்மீகமின் வடிவென்பர்சிலர்நிச மியம்பா
யிழுதைதீரிரா தாபுரத்தமரிரே ணுகையே. (அ)

சுத்தமாதிய நலங்கொள்பூசனைத்தகை தோய்ந்தாய்
பித்தர்பல்லுயிர்க் கொலைசெயல்பிழையெனும் பெற்றி
நித்தமும்புவி யோர்தெரிதரநன்கு நிகழ்த்தா
யெய்த்தநீரிரா தாபுரத்தமரிரே ணுகையே. (கூ)

காமநோயுறு கடையரைச்சினந்திடுங் கருத்தி
னேமமிக்குளா யாதலிற்றவமுளார் நின்னைச்
சேமவைப்பென விறைவரன்றோசொலாய் செயிர்தீ
ரேமமிக்கரா தாபுரத்தமரிரே ணுகையே. (கo)

முற்றிற்று.

ஐங்கரத்தோன் வாழ்க வரிகர புத்திரரும்
பங்கமிலி ரேணுகையும் பத்தர்களுந்—துங்க
விராதா புரமென் றிலங்குபதி யூடே
பராவநன்கு வாழ்க பரிந்து.

குருபாதமேகதி.

